திருநெல்வேலி சைவ சித்தாந்த சங்கத்
துண்டுப் பத்திரிகை - ௫

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்த சைவ போதம்

## (ஞானமிர்தம்)



திருநெல்வேலி
சைவ சித்தாந்த சங்கம்
கீழ ரத வீதி
திருநெல்வேலி டவுன்
[illegible]த்தாரி - ஆவணி

திருநெல்வேலி

# சைவ சித்தாந்த சங்கம்

(தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆதரவில் நடைபெறுவது)

---

## சங்க நோக்கங்களின் சுருக்கம்

(1) சைவ சித்தாந்த நெறியினை எங்கும் பரவச் செய்தல்.

அதன் பொருட்டு

(2) a நூல் நிலையம் (Library)

b வாசக சாலை (Reading Room)

c சித்தாந்த சைவ பாடசாலை, கலாசாலை முதலியன பொருள் வருவாய்க்கு ஏற்ப ஆங்காங்கு வேண்டு மிடங்களில் அமைத்தல்.

(3) சைவப் பிரசாரகர்களை பல இடங்கட்கும் அனுப்பிச் சொற்பொழிவுகள் செய்வித்தல்.

(4) தமிழ், ஆங்கிலத் துண்டுப் பத்திரங்கள் வெளியிடுதல்.

(5) ஆதிசைவ, சைவாச்சாரிய மரபிலுள்ள பிள்ளைகட்குச் சைவாகமப்படிக் கிரியைகள் முதலியன பயிற்றுவித்தல்.

(6) இவை போன்ற பல்லறம் நம்பல்.

திருநெல்வேலி சைவசித்தாந்த சங்க வெளியீடு:
துண்டுப் பத்திரிகை இதழ் ௩.



திருச்சிற்றம்பலம்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல்லா மர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

# சித்தாந்த சைவ போதம்

---

புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில் உள்ள பல தேசங்களுள் தென்னாடானது சிதம்பரம், திருவாரூர், காஞ்சீபுரம், மதுரை, உத்தரகோசமங்கை, இராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்குற்றாலம் முதலிய பல திவ்விய வைதிக சைவ ஸ்தலங்களைத் தன்னிடத்துப் பொருந்தக் கொண்டிருத்தலானும், திருஞான சம்பந்தமூர்த்தி முதலிய வைதிக சைவ பரமாசாரிய சுவாமிகள் நால்வரும் மற்றைத் தில்லைவாழந்தணர் முதலிய உண்மை நாயன்மார்களும், திருவவதாரஞ் செய்து, பரமசிவன் றிருவருட் பிரசாதம் நிலையிட்டு விளக்கி அநுக்கிரகஞ் செய்தற்குரிய தானமாய்ச் சிறத்தலானும், பிறவாற்றானும், மற்றை

நாடுகளைக் காட்டினும் மிக மேலாய் விளக்க முறுவதொரு நன்னாடாம்.

இச் செந்தமிழ் நன்னாட்டில் வசிக்கும் ஆரிய மகாஜனங்கள் பாரம்பரியமாகத் தழுவி யநுஷ்டித்துவரும் சற்சமயங்கள் பலதுறைப்படுவன. ஆயினும், அவை தம்முள் இக்காலத்துத் தலைமை பொருந்தி நிலைமையுற்று நடைபெறுஞ் சமயங்கள், சுத்தாத்துவைதம், விசிட்டாத்துவைதம், கேவலாத்துவைதம், துவைதம் என நான்காம். இவற்றுள், சைவர் சுத்தாத்துவைதத்தையும், வைஷ்ணவர் விசிட்டாத்துவைதத்தையும், ஸ்மார்த்தர் கேவலாத்துவைதத்தையும், மாத்துவர் துவைதத்தையும் தத்தஞ் சமய சித்தாந்தங்களாகக்கொண்டு போற்றி அநுட்டித்து வருகின்றார். அது நிற்க,

இச்சமயப் பகுப்பினர் நால்வருள் சைவரென நிற்கும் நம்மவரை நோக்கி உறுதிகள் சில கூறுவாம் :—

மகிமை பொருந்திய சித்தாந்த சைவர்களாகிய நமதன்பர்களே!

சிவபிரானை வழிபடு மார்க்கத்தராதலால், நாமெல்லாஞ் சைவரெனப்படுகின்றோம். இனி இங்ஙனம் சைவரான நாம் மெய்யான பரம்பொரு ளென்று கொண்டு வழிபடும் அச் சிவ

பிரானுக் குரிய இலக்கணங்கள் இவை யென்றும், அப் பிரானை வழிபடு மார்க்கமாகிய சைவ சமய இலக்கணங்கள் இவை யென்றும், அவற்றையுணர்த்துஞ் சைவ சாத்திரங்கள் இவையென்றும், அச்சாத்திரங்களின் மெய்ப்பொருளை முறையாக எடுத்து இனிது போதிக்கவல்ல சைவாசாரியர் இலக்கணங்கள் இவையென்றும், அச் சைவாசாரியர் போதவழிநின்று அநுட்டிக்கும் சைவாசாரங்களும் அதற் கநுகூலமாகுஞ் சம்பிரதாயங்களும் இவை இவை என்றும், அச் சைவாசார சம்பிரதாய அநுஷ்டானத்தால் எய்தும் இக பர வீட்டின்பங்களான பயன்கள் இவையென்றும், நன்ருக அறிந்துகொண்டே, இச் சைவ நன்னெறி கடைப் பிடித்து ஒழுகக்கடவராகின்ரேம்.

இனி யாதாயினும் ஒரு சமயத்தை நம்பி அதன் வழி ஒழுக விரும்புகின்றவன், அச்சமயத் தெய்வ இலக்கணம், அச்சமய இலக்கணம், அச் சமய நூன்முறை, அந் நூலின் மெய்ப்பொருளையுணர்த்தவல்ல சற்குரு இலக்கணம், அக் குரு உபதேசமான சமயாசார சம்பிரதாய முறைகள், அவ் வநுட்டானங்களா லுண்டாகும் இம்மை மறுமை வீடு பேற்றின்பப் பயன்க ளென்னு மிவைகளை யுள்ளபடி யுணராத பொழுது, அச் சமயத் தெய்வபத்தியும், சமய உறுதியும், சமய

நூற்றுணிவும், சற்குரு முறையும், சதாசார சம்பிரதாய அநுட்டானங்களும், அவற்றுலெய்தும் மெய்யான பிரயோசனங்களும், அவனுக்கு நன்ருக உளவாமாறில்லை.

இக்காலத்தில் நமது சித்தாந்த சைவருட் பெரும்பாலார் தாம் பற்றி வழிபடும் பரமமுழு முதற் கடவுளான பரமசிவன் இலக்கணம் நன்கு ஆராய்ந்து அறிந்தவரல்லர். அதுமட்டோ, தாம் கைக்கொண்டு அநுட்டிக்கும் சைவ சமய இலக்கணத்தைத்தானும் நன்கு ஆராய்ந்து தெளிந்தவருமல்லர். அதுமட்டோ, தஞ்சமய உண்மை விளக்குஞ் சைவ சாத்திரங்கள் இவை யென்று வரை செய்து உணர்ந்தவரு மல்லர். அதுமட்டோ, தஞ்சமய சாத்திரங்களின் மெய்ப் பொருள் போதிக்கவல்ல சைவாசாரிய இலக்கணந் தேர்ந்து தெளிந்தவரு மல்லர். அதுமட்டோ, அச் சைவாசாரிய உபதேச முறையான சைவாசாரங்கள் சைவ சம்பிரதாயங்கள் விசாரித்துக் கடைப்பிடித்து அநுட்டிப்பவர்களு மல்லர். அந்தோ! நஞ்சைவ சமயிகள் இந்த மெய்ம் முறைகளெல்லாம் விசாரித்து, அறிந்து தெளிந்து அநுட்டிக்கும் திறம் இங்ஙனம் எய் திற்றிலாராயின், சைவரென நிற்றன் மாத்திரை யாற்றுனே இம்மை மறுமை வீடுபேற் றுறுதிப்

பயன்களை உண்மையாக எய்த வல்லாதல் கூடுமோ!

நமது சைவர்கள் பரமபதியான பரமசிவ னிலக்கணம் நன்றாக ஆராய்ந்து உணரப் பெறாத குறைவினால், அயன் அரி உருத்திரனென்னும் முத் தேவருள் அப் பரம்பொருளையும் ஒரு தேவராக எண்ணி, பரத்துவ உறுதி தேறாது அவலப்படுகின் றார்கள். அதுவொன்றோ? வீரன், மாடன், கறுப் பன், பெரியண்ணன், பெரியாண்டவன், முனி யன், காத்தவராயன், சங்கிலியன், பாவாடை ராயன், மன்னசாமி, இருளன், காட்டேறி, பேச்சி, இருசி, காத்தாயி, நாச்சி, கண்ணகி முத லிய பொய்த் தெய்வங்களைப் பொருளெனக் கொண்டு வழிபட்டுப் பரிபக்குவப் படுகின்றார் கள். அதுவொன்றோ? தங்கள் சைவ சமயத் தோடு முழுதும் மாறுபட்டு நிற்கும் அல்லா, மீரா சாஹிப், கிறிஸ்து, மாதா என்னும் மிலேச்ச சம யத்தெய்வங்களையும் பொருளெனக் கொண்டு வழிபட்டுப் பழி பூணுகின்றார்கள். அது நிற்க.

நமது சைவசமயிகள் தஞ்சமய இலக்கண மான கொல்லாமை, புலாலுண்ணாமை, கள் ளுண்ணாமை, கள்ளாமை, வாய்மை, அன்பு, பொறை முதலிய பொது அறங்களையும், விபூதி ருத்திராக்ஷ தாரணம், சிவதீக்ஷை, சந்தியாவந் தனம், மந்திரஜெபம், சிவபூசை, சைவக்கிரியை,

சிவாலய சேவை, மாகேசுரபூசை முதலிய சைவச் சிறப்பறங்களையும், நன்கு தேர்ந்து தெளியாத குறைவினால், கொலை, புலாலுண்ணல், கள்ளுண்ணல், களவு, பொய், வன்கண்மை, வெகுளி முதலிய அதர்மங்களோடு மேற்கூறிய சைவாசாரங்களை விதியின்றி முறை பிறழக்கொண்டு, போலிவகையாற் செய்து கெடுகின்றார்கள். அது நிற்க.

நமது சைவசமயிகள் ஆரிய மொழியிலுள்ள வேதாகம முதலிய சைவ மெய்ந்நூல்களையும், தமிழ் மொழியிலுள்ள தேவார திருவாசக முதலிய சைவ அருணூல்களையும் வரையறுத்து உணராத குறையினால், சித்தாந்த சைவ அயலான சிவாத்துவித முதலிய அகச்சமய நூல்களையும், மாயாவாத முதலிய புறச்சமய நூல்களையும், அம் மெய்ந் நூல்களோ டொப்பத் தஞ் சமய நூல்களெனக் கொண்டு கற்று, வழிதடுமாறி அலைகின்றார்கள். அது நிற்க.

நமது சைவசமயிகள் தஞ்சமய பரமாசாரியர் முதலியோர் முறையும், தத்தம் பரம்பரைச் சைவசந்தானாசாரியர் முறையும், உள்ளபடி விசாரித்து உணராத குறையினால், சங்கராசாரியர் முதலிய ஏகாத்மவாத வேதாந்தாசாரியர்களையும், அவர் வழிப்பட்ட மாயாவாத சமயப் போதகர்களையும் தஞ் சமயகுரவர்களென்று கொண்டு வழிபட்டு அவம் பெருக்கிச் சித்தாந்தச் செந்

நெறி பிழைத்து அல்லற்பட் டுழல்கின்றார்கள். அது நிற்க.

நமது சைவசமயிகள் சித்தாந்த சைவபத்ததி தேர்ந்துணராத குறையினால், அசைவாசாரங் களையும், அசம்பிரதாயங்களையும், சைவாசாரங் களாகவும் சைவ சம்பிரதாயங்களாகவுங் கொண்டு, வீண்செய லுழப்புற்று வாணாள் வீணாள்படக் கழிக்கின்றார்கள்.

ஆதலால் பரமசிவன் இலக்கணம், சித்தாந்த சைவ இலக்கணம், சித்தாந்த சைவசாத்திர முறை, சித்தாந்த சைவாசாரியர் இலக்கணம், சித்தாந்த சற்சம்பிரதாய இலக்கணம், சித்தாந்த சைவாநுஷ்டானத்தால் எய்தும் இகபரவீடு பேற் றின்பப்பய னிலக்கணம் என்னுமிவற்றை, முறை யாக எடுத்துப் போதித்து நம்மவரை நல்வழிப் படுத்தல் நமக்கெல்லாம் பெருங்கடனுமாதலின், நாமெல்லாம் மற்றவைகளை வரன் முறையாக எடுத்து நம்மவர்க்குப் போதித்தலை விரதமாகக் கொண்டு செய்து போதரக் கடவமாவேம்.

சபாபதி நாவலர்

(ஞானாமிர்தம்)

முற்றுற்று

---

இதன் முதல் இரண்டாயிரம் (2000) பிரதிகள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக அமைச்சர்களி லொருவரான திருவாளர். மா. திரவியம் பிள்ளை யவர் கள் பொருளுதவியால் அச்சிட்டு வெளியிடப்பட்டன.

## சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடுகள்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருவடிப் புகழ்மாலை மலர்—க | ... | 0 | 3 |
| திருவடிப் புகழ்மாலை மலர்—உ | ... | 0 | 3 |
| சிவசின்னங்க ளணிவதேன்? | ... | 0 | 1 |
| சைவசித்தாந்த விளக்கச் சுருக்கம் | ... | 0 | 1 |
| கம்பராமாயண சங்கோத்தர விருத்தி | ... | 0 | 3 |
| சித்தாந்தப் பிரகாசிகை | ... | 0 | 3 |
| பூப்பிள்ளை அட்டவணை | ... | 0 | 2 |
| ஞானாமிர்தக் கட்டளை | ... | 0 | 4 |
| திணைமொழி 50 உரை | ... | 0 | 5 |
| இனியவை 40 உரை | ... | 0 | 5 |
| திருவாதவூரர் புராணம் அரும்பொருள் விளக்கத்துடன் | ... | 0 | 8 |
| நளவெண்பா மூலமும் உரையும் | ... | 1 | 0 |
| ஷை (மாணவர் பதிப்பு) | ... | 0 | 12 |
| அறிவுரைத்திரட்டு | ... | 0 | 12 |
| திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி உரை | ... | 1 | 4 |
| சோமேசர் முதுமொழிவெண்பா உரை | ... | 1 | 12 |
| ஸ்ரீ சிவஞான சுவாமிகள்—உரைச்செய்யுள் (7-வசன நூல்க ளடங்கியது) | ... | 1 | 12 |
| சிவஞானசித்தியார் சுபக்கம் இருவருரை | ... | 4 | 8 |

### தொல்காப்பியம்

| | | | |
|---|---|---|---|
| எழுத்ததிகாரம்—நச்சினார்க்கினியம் | ... | 4 | 0 |
| சொல்லதிகாரம்—சேனாவரையம் | ... | 3 | 8 |

---

செந்தமிழ்ச் செல்வி—ஓர் மாதப்பத்திரிகை

வருடக்கையொப்பம் ரூ. 3

கிடைக்குமிடம் :

306, லிங்கசெட்டித் தெரு, சென்னை.

P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS

## அவயவிகள்

(1) இச் சங்கத்தில், முழு முதற் கடவுள் சித்தாந்த சைவத்துட் குறித்த சிவ பரம்பொருளே யாமென்ற நம்பிக்கை யுடைமையும், அறவழி யொழுகுதல் இன்றி யமையாத தென்னுங் கொள்கையு முடைய எவரும் அவயவியாகச் சேரலாம்.

(2) கள், ஊன் விலக்கி, சைவநெறி கடைப் பிடித்து ஒழுகும் அவயவிகளே நிறைவேற்றுக் கூட்ட உறுப்பினராதற்கு உரிமைப்படுவர்.

(3) இச் சங்கத்திற்கு 'சைவ சித்தாந்த நூற்பதிப் புக் கழக (லிமிட்டெட்) ப் பங்காளிகள் அனைவரும் அவயவிகளாவர்.

(4) மேற் குறிப்பிட்டவர்கள் தவிர கீழே குறிப் பிட்டபடி (ஆயுள் சந்தா) நன் கொடைப் பொருள் கொடுக்கிறவர்களும் அவயவிகளாக இருப்பார்கள்.

### இச்சங்கத்திற்கு,

(a) சாதாரண அவயவிகள் (ஆயுள் சந்தா) ரூ 1. ரூபா ஒன்று அல்லது அதற்குமேல் ரூ. 99. வரை நன் கொடை யளிப்பவர்களும்,

(b) வாழ்நாட் காப்பாளர் (Life Patrons) ஆயுள் சந்தா ரூ. 100 அல்லது அதற்குமேல் ரூ. 499 வரை நன்கொடை யளிப்பவர்களும்,

(c) வழி வழிக் காப்பாளர் (Hereditary Patrons) ஆயுள் சந்தா ரூ. 500 அல்லது அதற்கு மேற் பட்ட தொகை நன்கொடை யளிப்பவர்களும் அவர் கள் வாரிசுகளில் மூத்தவரும் [வழி வழி (பரம்பரை)க் காப்பாளராக விருப்பதுடன்] அவயவிகளாகவு மிருந்து வருவார்கள்.

## நிறைவேற்றற் கூட்டத்தார்

(1) இச் சங்கத்திற்கு இரு அமைச்சர்கள் உள்பட 15 பேர்கள் உறுப்பினரா யிருப்பார்கள். அவர்களில் அமைச்சர்கள் உள்பட 11 பேர்கள் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக (லிமிட்டெட்) த்தின் நிறை வேற்றற் கூட்ட உறுப்பினர்களா யிருப்பதுடன் 4 பேர்கள் இச் சங்கக் காப்பாளர்களி லிருந்து மேற்படி நூற்பதிப்புக் கழக சாதாரண மகா சபையாரால் தெரிந்தெடுக்கப் படுவார்கள்.

(2) நிறைவேற்றற் கூட்டத்தார் தீர்மானங்களை அநுசரித்து இச் சங்க அமைச்சர்கள் சகல காரியங்களையும் நடத்த வேண்டியது.

## மூலதனம்

(1) மேற் குறிப்பிட்ட நன்கொடைப் பொருளை மூலதனமாக வைத்துக்கொண்டு அதிலிருந்து வருகிற வட்டியையும் நூற்பதிப்புக் கழக ஆதாயத்திலிருந்து வரும் தொகைப் பொருளையுங் கொண்டு இச் சங்கத்தின் செலவுகள் நடைபெறும்.

குறிப்பு:—இச் சங்க விதிப் புத்தகங்களும் பிறவும் சங்க ஆபீசுக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

---

P. R. RAMA IYAR AND CO., PRINTERS, MADRAS